# நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| **நூலின் பெயர்** | : | தரிசன மார்க்கம் |
| **ஆசிரியர்** | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| **மொழி** | : | தமிழ் |
| **வகை** | : | உபதேசம் |
| **முதல் பதிப்பு** | : | 2023 |
| **நூலின் அளவு** | : | டெம்மி |
| **பக்கங்கள்** | : | 19 |
| **தாள்** | : | A4 [8.03” X 11.07”] |
| **எழுத்து அளவு** | : | 14 புள்ளிகள் |
| **உரிமை** | : | அனைவருக்கும் |
| **கட்டமைப்பு** | : | சாதா பைண்டு |
| **கணினி அச்சு** | : | ஓம் கிராபிக்ஸ் |
| **நன்கொடை** | : | அகவிழிப்பு |

# தரிசன மார்க்கம்

நம்முடைய சனாதன தர்ம மரபில் **சாங்கியம், யோகம், வைசேடிகம், நியாயம், பூர்வ மீமாம்சம், உத்தர மீமாம்சம்** என ஆறு தரிசனங்கள் அன்றைய கால கட்டங்களில் தோன்றின.

அவைகளில், **பூர்வ மீமாம்சம், உத்தர மீமாம்சம்** என்ற இந்த இரண்டைத்தவிர, மற்ற நான்குமே உலகாயத சிந்தனைகளை மட்டுமே உள்ளடக்கியவைகள். அதாவது, இந்த உலகம், உலகங்களில் வாழ்கின்ற சீவர்கள், அத்தகைய சீவர்களில் மனிதன் செய்ய வேண்டிய கர்மங்கள் போன்ற விசயங்களைப் பற்றியே அவைகள் அதிகம் பேசுகின்றன.

இதிலே, **பூர்வ மீமாம்சம், உத்தர மீமாம்சம்** என்ற இந்த இரண்டு மட்டுமே ஆன்மீக சிந்தனைகளை உள்ளடக்கியவைகள்.

அதாவது, **சாங்கியம், யோகா, வைசேடிகம், நியாயம்** (இந்து தத்துவம்) ஆகியவைகள் உலகியல் நோக்குள்ளவை. அதாவது, கடவுள் இல்லாத பிரபஞ்சத்தைப்பற்றி பேசுபவைகள்.

ஒருவகையில், நாத்திகர்களான லோகாயதர்களுக்கும், ஆத்திகர்களான மீமாம்சகர்களுக்கும் ஓர் ஒற்றுமை உண்டு. அதாவது, இரு சாராரின் பொது நோக்கமும் இன்ப நாட்டமே ஆகும்.

அதிலே, ஆன்மா இல்லை என்று கூறும் நாத்திகர்கள் இகத்தில் மட்டுமே நம்பிக்கை வைத்து, அதில் இன்பத்தை அனுபவிப்பதுதான் வாழ்வின் இலக்கு என்று கருதினால், ஆன்மா உண்டு என்று ஏற்கும் ஆத்திகர்கள் இகத்தில் இன்பத்தை அனுபவிப்பது மட்டுமில்லாது, பரத்திலும் இன்பம் அனுபவிப்பதுதான் பிறவியின் இலக்கு என்று கருதுகிறார்கள்.

இதிலே, இந்த பூர்வ மீமாம்சர்களின் பரமானது முக்தி அல்ல, சொர்க்க போகமே. இருப்பினும், பிற்காலத்தில் வேதாந்தத்தின் செல்வாக்கு உயர்ந்ததின் காரணமாக முக்தியை ஏற்றுக்கொண்டாலும், வெறும் ஞானத்தால் முக்தி கிடைத்துவிடாது, கர்மங்களைக் கைவிடாமல் நிறை வேற்றினால் மட்டுமே

முக்தி கிடைக்கும் என்று புதிய வியாக்கியானங்களை (விளக்கங்களை) கொடுத்தார்கள்.

உண்மையான அறிவு அல்லது ஞானத்துக்கு இரண்டு வகையிலான பிரமாணங்களை (சான்றாதாரங்களை) மீமாம்சை பொதுவாக முன்வைக்கிறது.

ஒன்று, **பிரத்யக்ஷம்** (நேரடியாக அறிதல்), மற்றொன்று **பரோக்ஷம்** (பிற வழிகளில் அறிதல்). பிரத்யக்ஷம் என்பது, கண், காது உள்ளிட்ட புலன்களைக் கொண்டு நாமே நேரடியாக அறிந்துகொள்வது.

இதற்கு **நிர்விகல்ப - பிரத்யக்ஷ** என்று பெயர்.

பிறவழி அறிதலாகிய பரோக்ஷத்துக்கு **சவிகல்ப - பிரத்யக்ஷ** என்று பெயர்.

இதனை 5 விதங்களாக மீமாம்சை வகைப்படுத்துகிறது.

அவைகள், **அனுமானம்** (ஊகம்), **உபமானம்** (உவமை அல்லது ஒப்பீடு), **சப்தம்** (உரை), **அர்த்தாபத்தி** (பொருத்திக்கொள்ளல்), **அனுபலப்தி** (உணரப்படாமை).

மலை மீதிருந்து புகை வருவதைப்பார்த்து அங்கே தீப்பற்றி இருக்கலாம் என்று ஊகித்து அறிவது **அனுமானம்.**

புதிதாக அறிய நேரிடும் ஒரு பொருளை, விஷயத்தை ஏற்கெனவே நாம் அறிந்துகொண்டுள்ள ஒரு பொருளோடு, விஷயத்தோடு ஒப்பிட்டுப் பார்த்து அறிந்துக் கொள்வது **உபமானம்.**

சாஸ்திரத்தை கற்றுக்கொள்வதினாலும், அதற்கான நம்பத்தகுந்தவர்களின் உரை ஆகியவற்றின் மூலம் ஒன்றை அறிந்துகொள்வது **சப்தம்.** இதற்கு, **ஆப்தவாக்கியம்** என மற்றொரு பெயரும் உண்டு.

உண்ணாவிரதப் பந்தலில் இருக்கும் ஒருவர் களைப்படையாமல் இருப்பதைப்பார்த்து, அவர் ரகசியமாக உணவருந்தி இருக்கலாம் என்று பொருத்திப் பார்த்து அறிதல் **அர்த்தாபத்தி.**

ஒரு பொருளை குறிப்பிட்ட இடத்தில் காண இயலாததன் மூலம் அது அங்கு இல்லை என்று அறிந்துகொள்வதற்கு **அனுபலப்தி** என்று பெயர்.

உடலின் செயல்பாடுதான் உயிர் என்று கூறும் நாத்திகர்களைப்போலன்றி, உடல் வேறு, புலனறிவு வேறு, ஆன்மா வேறு என்று பிற ஆத்திகர்களைப் போலவே மீமாம்சகர்களும் கூறுகின்றனர்.

ஆயினும், ஆன்மா - இறைவன் குறித்த விரிவான ஆய்வையோ முக்தி நாட்டத்தையோ மீமாம்சை முன்னிறுத்தவில்லை. அவர்களைப் பொருத்தவரை வேதமே அவர்கள் தெய்வம். அதை விஞ்சி தனியொரு தெய்வமில்லை.

வேதச் சடங்குகளில் குறிப்பிடப்படுகின்ற இந்திரன், அக்னி உள்ளிட்ட தேவர்கள் எல்லாம் ஒருவித கற்பனைப் பாத்திரங்கள் போன்றதே. எனினும் அத்தேவர்கள், இயற்கையாற்றலின் உருவகங்கள் என்பதையும் ஏற்றுக் கொள்கிறார்கள்.

வேதத்தில் கூறப்பட்டுள்ள விதிமுறைகளை, நெறிமுறைகளை அதாவது நித்ய, நைமித்திக கர்மங்களை (தினசரி மற்றும் குறிப்பிட்ட காலத்திலான சடங்குகளை) தவறாமல் நிறைவேற்றுவது மட்டுமே மனிதனின் கடமை என்கிறார்கள்.

தர்மத்தைக் கடைப்பிடி (தர்மம் சர), தர்மம் தவறக்கூடாது என்பதெல்லாம் மீமாம்சையைப் பொருத்தவரை இந்தக் கர்மங்களைச் செய்வது மட்டும்தான்.

அதேநேரத்தில், அத்வைத வேதாந்திகளைப்போல நாம் வாழுகின்ற இந்த உலகம் மாயையானது என்று மீமாம்சை கூறவில்லை. நாத்திக வாதிகளைப் போலவே இந்த உலகம் உண்மையானது என்று கூறுகிறார்கள்.

அதேநேரத்தில், இந்த உலகில் நாம் கண்களால் காண இயலாத, மரணத்துக்குப் பின் அனுபவிக்க உள்ள சொர்க்கம் போன்ற மற்ற லோகங்கள் உண்டு என்று அவர்கள் கூறுகிறார்கள்.

பொதுவாக, நாத்திகவாதிகளின் கடும் கண்டனத்துக்கு உள்ளாகுபவைகள் இந்த சொர்க்க - நரக கருத்துகளும், சொர்க்கத்தை அனுபவிப்பதற்காகச் செய்கின்ற சடங்கு சம்பிரதாயங்களுமே எனலாம்.

இதில், ஒரு வினோதம் என்னவென்றால், வேதாந்திகள் உள்ளிட்ட ஆத்திகவாதிகளும் மீமாம்சை வலியுறுத்தும் சொர்க்க வாழ்வு, சடங்கு சம்பிரதாயங்களை நாத்திகர்களைப் போன்றே புறந்தள்ளுகிறார்கள்.

அதற்குப்பதிலாக, வேதாந்திகள் (உத்தர மீமாம்சகர்கள்) ஆன்ம அறிவையும், முக்திக்கான முயற்சியையும் வலியுறுத்துகிறார்கள்.

உண்மையான இந்த உலகம், புலன்கள் மற்றும் உயிர் வாழக்கூடிய உடல்களால் ஆனது. இந்த உலகில், குறிப்பிட்ட உடலில், தான் முன்பு செய்த கர்ம பலன்களை அனுபவிப்பதற்காக ஆன்மா குறிப்பிட்ட காலம் வரை வசிக்கிறது. ஆன்மாக்கள் எண்ணற்றவை என்கிறார்கள் பூர்வ மீமாம்சகர்கள்.

ஆன்மா நிரந்தரமானது என்றபோதிலும், இக உலகில் அது செய்த பாவ - புண்ணியங்களுக்கு ஏற்ப மாற்றம் பெறுகிறது. இந்த ஆன்மாவுக்கு சுய பிரக்ஞை கிடையாது. மனத்தின் துணைகொண்டு, புலன்களின் (உணர்வுக் கருவிகளின்) மூலம் குறிப்பிட்ட பொருட்களைத் தொடர்புகொள்ளும்போது அதுதொடர்பான அறிவை ஆன்மா பெறுகிறது.

ஆழ்ந்த உறக்கத்தின்போது ஆன்மாவுக்கு (உயிருக்கு) எந்த பிரக்ஞையும் இல்லாது இருப்பதைக்கொண்டு இதனை உறுதி செய்துக் கொள்ளலாம்.

வேதங்களில் விதிக்கப்பட்டுள்ள கர்மங்களை (வேதச் சடங்குகளை) செய்வதே உடலில் வசிக்கின்ற ஆன்மாவுக்கான கடமை. இதன்மூலம் உருவாகின்ற அபூர்வம் என்ற ஆற்றல், மனிதர் இறந்ததும் அவரது ஆன்மாவை சொர்க்க லோகத்தில் இடம்பெறச் செய்கிறது என்கிறார்கள் பூர்வ மீமாம்சகர்கள்.

உரிய கர்மங்களைக் கைவிடுவதாலோ அல்லது செய்யக்கூடாத கர்மங்களைச் செய்வதாலோ பாவம் ஏற்பட்டு, நரகத்தை அனுபவிக்க நேரிடுகிறது. வேதச் சடங்குகளே உரிய பலன்களைக் கொடுக்க வல்லவை என்பதால், எல்லாம் வல்ல இறைவன் என்று எதுவுமிருக்க அவசியமில்லை என்றார்கள் ஆரம்பத்தில் இந்த பூர்வ மீமாம்சகர்கள். அவர்களே, பிற்பாடு இந்த சடங்கு, சம்பிராதயங்களை செய்வதற்காக, கோவில்களை உண்டாக்கி, இறைவனையும் ஏற்றுக் கொண்டார்கள்.

இந்த விஷயத்தில், புண்ணிய - பாவங்களுக்கு ஏற்ப மரணத்துக்குப் பின் சொர்க்கம் அல்லது நரகம் உள்ளது, அதில் பாவ - புண்ணியங்களுக்கு ஏற்றவாறு வாழ்வு உள்ளது என்பது, பூர்வ மீமாம்சகர்களின் கருத்து.

இது பிற்பாடு வந்த கிறிஸ்தவமும், இஸ்லாமும் சொல்லும் மறு வாழ்வை ஒத்து உள்ளது. ஆயினும், அதில் இவர்களைப் பொருத்தவரை இறைவன்தான் ஓர் உயிரின் சொர்க்க, நரக வாழ்வை தீர்மானிக்கிறார் என்று மாற்று மதத்தினர் கூறுவதுப்போன்று, அதை ஏற்காமல், மீமாம்சகர்களைப் பொருத்தவரை, அவரவர் வினைகளே அவற்றுக்குரிய விளைவுகளாகிய அபூர்வம் என்ற ஆற்றலின் மூலம் உரிய பலன்களைத் தந்து விடுகின்றன என்கிறார்கள்.

அதேநேரத்தில், பூர்வ மீமாம்சகர்கள் இறைவனை மறுத்து, வேதச் சடங்குகளை மட்டுமே தர்மம் **(அறம்)** என்று கூறி வலியுறுத்துவது, இறைவனை மறுத்து, அறத்தை வலியுறுத்தும் பௌத்தத்தையும், சமணத்தையும் ஒத்துள்ளது போன்று காணப்பட்டது.

ஆனால், இடையில் வந்த இந்த சமணமும், பௌத்தமும் வேள்விச் சடங்குகளைக் கடுமையாக எதிர்த்து, **அன்பு, ஒழுக்கம், தவநெறி** உள்ளிட்ட வாழ்வியல் பண்புகளையே **அறம்** என்று எடுத்துரைத்தன.

அதுப்போலவே, **சாங்கியம், யோகம், வேதாந்தம்** போன்ற தரிசனங்களும் இதுபோன்ற வாழ்வியல் பண்புகளையே **அறம்** என்று முன்னிறுத்துகின்றன.

ஆரம்பத்தில், இறைவனை மறுத்த பூர்வ மீமாம்சகர்கள் பிற்காலத்தில் அபூர்வம் குறித்த கேள்விகள் எழுந்தபோது, அதாவது, கர்மங்கள் எப்படி? சீவர்களுக்கு அளிக்கப்படுகின்றன என்ற கேள்விகள் கேட்கப்பட்ட போது, அதனைச் செயல்பட வைப்பது இறைவன்தான் என்று சமரசம் செய்துக் கொண்டார்கள். ஆயினும், அன்றைய காலங்களில் இறைவன் குறித்து மேற்கொண்டு எந்த விளக்கங்களும் இவர்கள் தரவில்லை.

இதேபோல், சொர்க்கத்தில் அளவில்லாத இன்பத்தைத் துய்ப்பதே ஜீவனின் லட்சியம் என்று முதலில் கூறிய பூர்வ மீமாம்சகர்கள், பின்னர் இதர தத்துவங்களின் செல்வாக்கு காரணமாக, மோட்சமே (முக்தியே) உயர்ந்த இலக்கு என்று ஏற்க வேண்டிய கட்டாயம் வந்தது.

இதற்கேற்ப சில விளக்கங்களையும் அவர்கள் தந்தார்கள். அதிலே, சீவர்கள் தமது விருப்பங்களை நிறைவேற்றுவதற்காகச் செய்யும் காம்ய கர்மங்களைச் செய்யாமல் விடுப்பதன் மூலம், மறுபிறவிக்கான வாய்ப்புகளைத் தவிர்க்கலாம் என்றனர் இந்த பூர்வ மீமாம்சகர்கள்.

ஆனால், செய்ய வேண்டிய நித்ய, நைமித்திக கர்மங்களை விடாமல் செய்தால்தான், முக்திக்கான **சித்த சுத்தி** ஏற்படும். இந்தக் கர்மங்களைக் கைவிட்டால், **பிரத்யவய தோஷம்** தொற்றிக்கொண்டு முக்திக்கான வழி அடைபட்டு விடும் என்றனர்.

ஆகவே, தெரியாமல் செய்த பாவங்களை பிராயச்சித்த கர்மங்களைச் செய்து நிவர்த்தி செய்துகொள்ளலாம். அதேநேரத்தில் இந்தப் பிறவி எடுக்க நேர்ந்ததற்கான பிராரப்த கர்மம், இந்த உலகில் அதற்குரிய பலன்களை அனுபவிப்பதன் மூலமே தீரும் என்றனர்.

இவ்வாறாக, காம்ய கர்மங்களைத் தவிர்த்தும், நித்ய, நைமித்திக, பிராயச்சித்த கர்மங்களைச் செய்தும், பிராரப்த கர்மங்களின் பலன்களை அனுபவித்தும், மரணத்துக்குப் பின் விடுதலையை அடையலாம் என்கிறது பூர்வ மீமாம்சை.

ஒருவழியாக முக்தி என்ற கருத்தை ஏற்க நேர்ந்தபோதிலும், வேள்விச் சடங்குகளுக்கே பூர்வ மீமாம்சை இன்று வரை முக்கியத்துவம் தருகிறது.

ஹிந்து மதம் **லௌகீகம், ஆன்மிகம்** ஆகிய இரண்டு வழிமுறைகளை ஒரே நேரத்தில் கடைப்பிடிக்கிறது. இதில் ஆன்மிகம் என்ற அகவாழ்வு வேதாந்தம், சாங்கியம், யோகம் உள்ளிட்ட தத்துவங்களைச் சார்ந்து நிற்கின்ற போதிலும், லௌகீகம் என்ற யதார்த்த புற வாழ்வு பூர்வ மீமாம்சை முன்னிறுத்தும் வேள்விச் சடங்குகளையே பெரிதும் சார்ந்துள்ளது.

பூர்வ மீமாம்சையின் அடிப்படைக் கருத்துகளான சொர்க்கம் - நரகம் போன்ற போகத்தையும், வேள்வி சடங்குகளையும் கடுமையாக எதிர்த்துத்தான் சமணமும், பௌத்தமும் இந்தியாவில் வளர்ந்தன.

இதிலே, பூர்வ மீமாம்சகர்களின் வழியே பயணித்த பலரும், பயனற்ற வேள்விகளினாலும், யாக, யக்ஞங்களினாலும் உயிர்கள் அழிக்கப்படுதை ஏற்க

மறுத்தனர். இவர்கள் இதை யாருக்கு செய்கிறோம், எதற்காகச் செய்கிறோம் என்ற விசாரத்தை மேற்கொண்டனர்.

அதிலே, இந்த யாக, யக்ஞங்களை ஏற்றுக் கொள்ளக்கூடிய தேவர்கள் எந்த லோகத்தில் இருப்பினும், யாராக இருப்பினும், உண்மையிலேயே அவர்கள் தேவர்களாக இருப்பின் கருணையும், அன்பும் கொண்டவர்களாக மட்டுமே இருக்க முடியும். இதுப்போன்ற உயிர் வதைகளை ஊக்குவிக்கும் உள்ளம் கொண்டவர்களாக இருக்க முடியாது என்று அறிந்தனர்.

அதன் விளைவாக, வேதத்தின் இறுதிப்பகுதிகளை ஆய்வுக்கு எடுத்துக் கொண்டு, அதை **உத்தர மீமாம்சம்** என்ற **வேதாந்தம்** உருவானது.

வேதாந்திகள் பூர்வ மீமாம்சகர்கள் கூறும் முக்திகளை மறுப்பதில்லை. அதேசமயம், முக்திகளின் படி நிலைகளை விளக்கி, பத முக்திகளைக் கடந்து, பர முக்திக்கு சீவன் (மனம்) உயர வேண்டும் என்று வலியுத்துகின்றனர்.

அத்தகைய முக்திகளின் படி நிலைகள் முறையே, **சரியை, கிரியை, யோகம், ஞானம்** எனும் நான்கு பாதைகளாகும்.

## சரியை

ஒருவன் அதிகாலைப் பொழுதில், சூரிய உதயத்திற்கு முன்பு எழுந்து, குளித்து தூய உடை அணிந்து, இறைவனை **உருவ வழி**பாடு செய்து, "**பக்தன்**" என்ற நிலையில் தொண்டு புரிந்து, இறைவனை அடையும் பாதையான "**தாச மார்க்கம்**" மேற்கொண்டு "**சாலோகம்**" என்ற நிலையை அடைவது.

## கிரியை

ஒருவன் இறைவனை **உருவமும், அருவமும்** கலந்த நிலையில் வழிபட, வழிபட மக்கள் தொண்டே மகேஷன் தொண்டு என்ற நிலை உருவாகி, மற்றவர்களுக்கு பல நற்செயல்களைச் செய்து, "**கர்மவான்**" என்ற நிலையில் "**கடவுளை தந்தையாகவும், தன்னை கடவுளின் புத்ரனாகவும்**" அனுஷ்டித்து அடையும் பாதையான "**சத்புத்ர மார்க்கம்**" மேற்கொண்டு "**சாமீபம்**" என்ற நிலையை அடைவது.

## யோகம்

ஒருவன் இறைவனை **அருவமாக** வழிபட ஆரம்பித்து, பிராணாயாமம், ஆசனம் போன்ற அஷ்டாங்க முறையில் பயிற்சிகள் மேற்கொண்டு, இறைவனை நண்பன் போல பாவித்து, “**யோகி**” என்ற நிலையில் அவனை அடையும் பாதையான “**சகமார்க்கம்**” மேற்கொண்டு “**சாரூபம்**” என்ற நிலையை அடைவது.

இப்படி **மேற்சொன்ன மூன்று பாதைகளில்** இறைவனை அடைய விரும்புபவர்கள் பெறுவது “**பதமுக்தி**” ஆகும்.

## ஞானம்

ஒருவன் மனக்கண்ணால் தான் இன்னது என்று அறிந்து அம்மயமாகி, மஹாவாக்யத்தின் பொருளுணர்ந்து, பரம தாத்பர்யத்தை ஆராய்ந்து, **பிரபஞ்சம், ஜீவன், ஈஸ்வரன்** இவற்றின் மூல தத்துவத்தை அறிந்து, **காண்பவன், காட்சி, காணப்படும் பொருள்** இந்த மூன்றும் ஒன்றேயான அந்த பரப்பிரம்மம் என்று அறிந்தவன் “**ஞானி**” என்ற நிலையில் “**சன்மார்க்கம்**” மேற்கொண்டு “**சாயுஜ்யம்**” என்ற நிலையை அடைந்து “**பரமுக்தி**” பெறுவதே பரமானந்த நிலையாகும்.

இதில் சன்மார்க்க நிலையான “**பரமுக்தி**” பெற்றவன், மறுபிறவி இல்லாததால் மீண்டும் பிறக்காமல், இறைவனுடன் இரண்டறக் கலந்து விடுவான்.

இதை நடைமுறையில் எப்படி சாத்தியமாக்க வேண்டுமெனில், அதற்கான சாஸ்திரங்களை தக்க சத்குருவின் வாயிலாகக் கற்று, மாணவன் தன் மனதை அந்த சாஸ்திரங்களில் கூறப்பட்ட விசயங்களை **சிரவணம், மனனம்,** மற்றும் **நிதித்யாஸனம்** என்பதின் வாயிலாக விசாரிக்க வேண்டும்.

அதன் அடிப்படையிலே, மனதின் நான்குவித பரிமாணங்களைக் காணலாம்.

அவைகள் முறையே, **1. வைஸ்வாநரன், 2. தைஜஸன், 3. பிராக்ஞன், 4. பிராஹ்மணன்** என்பதாகும்.

அதாவது, மனம் தன் முதல் பரிமாணத்தில் ‘**வைஸ்வானரன்**’ என அழைக்கப்படுகிறது. இங்கு வைஸ்வானரன் என்பது விழிப்புநிலையில் உள்ளவன் என்று பொருள். இதில், மனம் **ஸ்தூல சரீரத்தில்** இந்த உலகை அனுபவிக்கின்றது.

இரண்டாவது நிலையை ‘**தைஜஸன்**’ என்கின்றது சாஸ்திரம். அதாவது ‘**கனவுநிலையில் இருப்பவன்**’ என்கிறது. இதில், மனம் **சூக்ஷும சரீரத்தில்** மன உலகை அனுபவிக்கின்றது.

மூன்றாவது பரிமாணமாக மனம் ‘**ப்ராஜ்ஞன்**’ - “**ஆழ்ந்த உறக்கநிலை**” அனுபவத்தில் உள்ளது. இதில், மனம் **காரண சரீரத்தில்** ஒடுங்கி விடுகின்றது.

பொதுவாக, மனதின் **விழிப்புநிலை** (வைஸ்வாநரன்) உணர்வுபூர்வமாக, புறவயமாக இருக்கிறது. தான் வாழ நேர்ந்திருக்கிற வெளி உலகை, அதன் சூழ்வெளியான மாபெரும் பிரபஞ்சத்தை மனம், இந்நிலையில் அனுபவிக்கிறது. ஆதலால், அதுவே, பிரபஞ்சத்தின் ஒரு பகுதியுமாகிறது.

இரண்டாவது நிலையான மனதின் **கனவு** நிலை (தைஜஸன்), தன் உணர்வுகளை அகமுகமாகத் திருப்பிவிடுகிறது. இங்கே புறவுலகு மறைந்து, மனவுலகு தெரிய ஆரம்பிக்கின்றது. மனம் அதனை அனுபவிக்கிறது.

மூன்றாவது பரிமாணமாக மனதின் **ஆழ்ந்த உறக்கநிலை (**ப்ராஜ்ஞன்) உள்ளது. இதில் மனதின் புறஅனுபவங்கள் ஒடுங்கி, உணர்வு உட்புறமாகத் திரண்ட நிலை உண்டாகின்றது. அங்கே, அனுபவங்கள், உணர்வுகள் ஒடுங்கிய நிலையில், மனதின் எந்த எண்ணங்களும் எழாத அந்நேரத்தில் இந்த உலகம், உறவுகள் என எல்லாமே மறந்துவிடுகின்றது. மனம் இவ்வாறு தன்னை மறைந்துவிட்ட நிலை என்பது, மனதின் ‘**ஆனந்தமய:**’ என்று கூறப்படுகின்றது.

இவ்வாறு, மூன்று சரீரங்களின் வாயிலாக, இந்த மனம் தன்னுடைய அவஸ்தைகளை அனுதினமும் அனுபவமாக்குகின்றது.

இவைகளுக்கு அப்பாற்பட்ட நான்காவதாக ஒரு நிலை உள்ளது. அது மனம் தன்னை முற்றிலுமாக இழந்து, அந்த தூய அறிவாக பிரகாசிக்கும் நிலைக்கு ‘**பிராஹ்மணன்**’ (**தூயவன்**) என்று கூறப்படுகின்றது.

இது, நான்காவது நிலை எனப்பட்டாலும், முதல் மூன்று நிலைகளை உள்ளடக்கியதும், அதேசமயம் அந்த மூன்று நிலைகளைக் கடந்த நிலையுமாகும்.

இது புறமுக நிலையல்ல, அகமுகநிலையல்ல, இரண்டும் கலந்த உணர்வு குவிந்த நிலையுமல்ல. இதனைக் காண இயலாது. இதனைப் புரிந்துக் கொள்ள முடியாது. இது, அடையாளங்கள் இல்லாத, விளக்கமுடியாத, சிந்தனைக்கு அப்பாற்பட்ட ஒரு உன்னத நிலை. மங்கலமானது, சாந்தமே வடிவானது, '**த்வைதம் இல்லாதது**'. அதாவது, **இரண்டற்றது.**

'**த்வைதம்**' (state of duaity) என்பது: **நல்லது - கெட்டது, பாவம் - புண்ணியம், நிலையான - நிலையற்ற** போன்ற இரண்டிரண்டாக, ஒன்றுக்கெதிராக இன்னொன்றைப் பார்க்கும் மனநிலை.

அதுவே, '**அத்வைதம்**' (state of non-duaity): இது மனதின் உண்மையான '**இயற்கை நிலை**' அல்லது '**இயல்பு நிலை**', **ஆதிநிலை** ஆகும்.

இவ்வாறு தனக்குள்ளிருக்கும் ஆன்மாவை மனதின் படி நிலைகளின் வாயிலாக, அந்த மனதை படிப்படியாக உயர்த்திக் கொண்டு வந்து, தன்னை '**அறிபவன்**' தன்மயமாகி, தன்னில் தானாய் ஒளிர்கிறான். அவனே, அந்த பிரஹ்மத்தை உணர்ந்தவனாகிறான். அவ்வாறு, அந்த ப்ரஹ்மத்தை தன்னில் தானாய் உணர்ந்து, அதில் இரண்டறக் கலந்து விட்ட நிலையை **சமாதி** என அழைக்கின்றது.

அதாவது, **சமாதி** என்றால், அந்த ஆதிக்கு (இறைவனுக்கு) சமமாக இருப்பது எனலாம்.

**சமாதி** என்பது தியானிக்கப்படும் பொருளின் வடிவம் அல்லது புற எண்ணங்களை விடப்படும் பொழுது இந்த சமாதி நிலையானது ஏற்படுகிறது.

அதாவது, எந்த வடிவமும் இன்றி கருத்தை மட்டும் உணரும் நிலையை அடைந்து விட்டால், தியானத்தின் அந்த நிலையை **சமாதி** எனலாம்.

பொதுவாக, சமாதி என்பது நிசப்தமான ஆயினும் உயிரோட்டமுள்ள ஒரு **விழிப்புணர்வு நிலை** என்பதாகும். அதாவது, விழிப்பும், உறக்கமும், கனவுமற்ற ஓர் **அறிவு நிலை**.

தியானதில் தன்னைப்பற்றிய, தியானிக்கப்படும் பொருள் பற்றிய மற்றும் தியானம் செய்யும் முறை பற்றிய கவனமானது இருக்கும்.

ஆனால், சமாதியில் தன்னைப் பற்றியும், தியானம் செய்யும் முறை பற்றிய அறிவானதும் அகன்று, தியானிக்கப்படும் பொருள் ஒன்றுதான் மனதில் இருப்பதைப் போன்ற அனுபவமானது ஏற்படும். பொதுவாக, மகான்கள் சமாதியை **சவிகல்ப சமாதி, நிர்விகல்ப சமாதி**, மற்றும் **சகஜ சமாதி** என்று பிரித்து விளக்கியுள்ளார்கள்.

**சவிகல்ப சமாதி** என்பது, அறிபவன், அறிவு என்னும் வேறுபாடுகள் மறையாமலே, இரண்டற்ற பிரம்மத்தின் வடிவை அடைந்த மனதின் ஒருமுகப்பட்ட நிலையே **சவிகல்ப சமாதி** என்கின்றார்கள்.

அதிலே, விகல்பம் எனில் பகுத்துக் காணும் கற்பனையாகும். சவிகல்ப சமாதியில், சித்தமானது (அறிவானது) அறிபவனான தன்னுடைய மற்றும் அறிவினுடைய எண்ணங்களுடனயே இரண்டற்ற பிரம்ம வஸ்துவின் மீது நிலைத்து நிற்கும்.

பிரம்ம வஸ்துதான் முதன்மையானதாகும்.

அறிந்து கொள்ளும் அறிவானது குறைந்து இருக்கும்.

அதனால், தற்காலிகமாக அந்த இரண்டும் மறக்கப்பட்டதைப் போல இருக்கும். ஆனால் உண்மையிலேயே ஒடுங்கி இருப்பதில்லை. இந்த சவிகல்ப சமாதியை **சம்ப்ரஜ்ஞாத சமாதி** என்றும் அழைப்பதுண்டு.

சவிகல்ப சமாதி நிலையில், மரத்தினால் செய்யப்பட்ட யானை போன்றவை (பொம்மை யானை) தோன்றிக் கொண்டிருந்தாலும், அத்துடன் மரமும் கூடவே சேர்ந்து தோன்றிக் கொண்டிருப்பதைப் போல, பன்மையான இவ்வுலகமானது (துவைத பிரபஞ்சம்) தோன்றிக் கொண்டிருந்தாலும், **இரண்டற்ற அத்வைத பிரம்ம வஸ்துவும்** உணரப்படுகிறது.

மரத்தினால் செய்யப்பட்டுள்ள யானையைக் காணும் பொழுது, அறிவுடைய எவருமே அதையே உண்மையான யானை என்று எண்ண மாட்டார்கள்.

அது, யானை என்னும் பெயர் மற்றும் யானை என்னும் விலங்கின் உருவமானது அதற்கு இருந்தாலும், இந்தப் பெயரும், உருவமும் வெறும் வார்த்தைகளால் ஆன பேச்சளவு மட்டுமே ஆகும்.

அது உண்மையிலேயே, **மரம்** என்பதை உணர்ந்து கொள்ள இயலுகிறது.

அதுப்போன்றே, பெயரையும், வடிவத்தையும், பெற்றுள்ள **பரம்** இந்த உலகமாக இருப்பினும், **அறிபவன், அறிவு, அறியப்பட்ட வஸ்து** (பிரம்மம்) என்னும் மூன்றும் காணப்பட்டாலும், அத்துடனேயே பிரம்ம வஸ்துவின் அனுபவமும் (பிரம்மானுபவம்) கூட, இந்த சவிகல்ப சமாதியில் ஏற்பட்டுக் கொண்டே இருக்கும். அதாவது, ஆன்மாவை அணு அணுவாக தரிசித்தல். இதில் **அறிபவன், அறிவது, அறியப்படும் பொருள்** என திரிபுடி உண்டு.

சவிகல்ப சமாதியை எட்டுகின்றவன் விரைவில் நிர்விகல்ப சமாதிக்குப் போதல் வேண்டும். சீவனுடைய முயற்சியும் ஈசனுடைய அருளும் அதற்கு ஒன்று சேர வேண்டும். நிர்விகல்ப சமாதியில் **முத்தி** அல்லது **வீடு** எய்துதல் பூர்த்தியாகின்றது.

அத்தகைய, **நிர்விகல்ப சமாதி** என்பது **அறிபவன்** (பிரம்மம்) மற்றும் **அறியப்படும் பொருள்** (சீவன்) போன்ற வேறுபாடுகள் அகன்று, இரண்டற்ற பிரம்ம வடிவாகவே ஆகி, அந்த பிரம்மத்துடன் ஒன்றி, ஒடுங்கியுள்ள மனநிலைதான் **நிர்விகல்ப சமாதி** என்பதாகும்.

இந்த நிர்விகல்ப சமாதி நிலையை **அசம்ப்ரஜ்ஞாத சமாதி** என்றும் அழைக்கப்படுகின்றது. இதில அறிபவன் (திருக்), அறியப்படும் பொருள் (திருஷ்யம்) போன்ற வேறுபாடுகள் அனைத்தும் கரைந்து போயிருக்கும்.

பிரம்மவஸ்து ஒன்று மட்டுமே அனுபவத்தில் இருக்கும்.

எவ்வாறு, உப்பானது தண்ணீரில் கரைந்து தன் வடிவத்தை இழந்து தண்ணீரின் வடிவத்தை ஏற்று, தன் வடிவத்தை இழப்பது போல, இரண்டற்ற பிரம்மவஸ்துவின் (மெய்ப்பொருளின்) வடிவத்தை அடைந்த சீவனின் மனதின் வடிவமானது (எண்ணங்கள்/விருத்தி) காணப்படுவது இல்லை.

நிர்விகல்ப சமாதிக்கும், கிரமமுக்திக்கும் வேற்றுமையொன்று உண்டு. சுத்த கற்பூரம் எறிந்தால், அங்கு சாம்பலோ கரியோ எஞ்சியிருப்பதில்லை. இது போன்று நிர்விகல்ப சமாதியில் **சிவபோதம்** எஞ்சியிருப்பதில்லை. அது **பரபோதத்தில்** ஒடுங்கிவிடுகின்றது.

அங்கு, இரண்டற்ற பரப்பிரம்மம் மட்டுமே உணரப்படுகிறது.

நிர்விகல்ப சமாதியில் மட்டுமே பிரம்ம தரிசனம் ஆகும் வரையிலும் சீவனிடனிருந்த சித்த விருத்தியானது தானே மறைந்து, தன்னில் தானாய் தன் பிரம்ம சொரூபம் மட்டுமே எஞ்சி நிற்கிறது.

ஆன்மாவை **அகண்டரூபமாக** தரிசித்தல். இது ஒரே பிரம்ம சொரூபமாக விளங்கும் அனுபவம். இவை சத்துவ குணத் தொழில்கள். இவற்றில் ஒருவன் எவ்வளவு காலம் நிஷ்டையில் இருந்தாலும், நிஷ்டை கலைந்ததும் மீண்டும் இந்த உலகத்திற்கும், விவகாரத்திற்கும் வர வேண்டியதே. ஆகவே இதில் ஆரம்பமும், முடிவும் உண்டு.

எனவே, ஆழ்ந்த உறக்க நிலையும் சமாதியும் ஒன்றுதானா? எனும் சந்தேகம் பெரும்பாலானாவர்களுக்கு வருவதில் தவறில்லை என்றாலும், இந்த இரு நிலைகளிலுமே மனதில் எண்ணங்கள் எழுவது தென்படுவதில்லை என்பது பொதுவாக இருப்பினும், உண்மையில் நிர்விகல்ப சமாதியில் மனதின் எண்ணங்களானது ஒரு நிலைப்பாட்டில் உள்ளது.

உறக்கநிலையில் மனதில் எண்ணங்கள் இல்லை என்பதால், உறக்க நிலையை சமாதி நிலைக்கு ஒப்பிடக்கூடாது.

அதாவது, ஆழ்ந்த உறக்க நிலையில் **அறிபவன் (மனம்), அறிவு, அறியப்படும் பொருள்** என்னும் பகுப்புக்கள் இருப்பதில்லை. எண்ணங்கள் இருப்பதில்லை. எனவேதான் உறக்கநிலைக்கும், நிர்விகல்ப சமாதிக்கும் உள்ள வேறுபாடுகள் மாறுபட்டதாகக் காணப்படுகின்றது.

நிர்விகல்ப சமாதியில் சித்தவிருத்தி ஏற்படாமல் இருப்பதற்குக் காரணம், அது பிரம்மனின் வடிவத்தைப் பெற்று ஒரு நிலைப்பாட்டில் நிற்பதே ஆகும்.

அதாவது, உப்பு, கடல் தண்ணீரில் கரைந்து இருப்பதால், அது தென்படாமல் இருப்பினும், உப்பின் தன்மை நீரில் இருக்கதான் செய்கிறது. ஆனால், ஆழ்ந்த உறக்கநிலையில் மனதில் எண்ணங்கள் ஏற்படாமல் இருப்பதற்கு அது இல்லாமல் இருப்பதுதான் காரணமாகும்.

கிரகிக்கத்தக்க எந்தப் பொருளுமே அந்த நிலையில் இல்லாமல் இருப்பதால் மனமானது தன்னுடைய காரணமான **அறியாமை** எனும் அஞ்ஞானத்தில் தற்காலிகமாக ஒடுங்கியிருக்கிறது.

அது மீண்டும் வெளிப்படும்போது, மனோ விருத்திகள் உண்டாகிவிடும்.

அடுத்து, **சகஜ சமாதி** என்பதில், **சஹஜ்** என்றால் இயல்பான என்பது பொருளாகும். சமாதி என்பது விழிப்புணர்வுடன் கூடிய, அறிவாற்றல் பொருந்திய ஆனந்த அமைதி நிலை அனுபவம் என்பதினால், இந்த நிலையில் அளவற்ற ஆற்றல் பெருகி, அறிவுத்திறன் கூடி, படைப்பாற்றல் உண்டாகின்றது.

''**சாசுவத முக்தி நிலை ஈதென்று உணர்த்தியே சகச நிலை தந்து வேறொன்றும் எண்ணாமலுள்ளபடி சுகமா யிருக்கவே ஏழையேற் கருள்செய்**'' - என்கின்றார் தாயுமான சுவாமிகள்.

அதாவது, நிலையான முக்தி நிலை இதுதான் என்று எனக்கு உணர்த்தி, அதில் எப்பொழுதும் **இயல்பாக இருக்கின்ற** நிலை தந்து, வேறு ஒன்றையும் எண்ணாமல் இருக்கும்படி, ஆனந்தமாக இருக்கவே அருள் செய்வாய் என்று பாடுகின்றார்.

இதனை, “**தண்ணீரிலிருந்து துள்ளி நிலத்தில் விழுந்து துடித்துக் கொண்டிருக்கும் மீனை எடுத்து மறுபடியும் தண்ணீரிலேயே விட்டு விட்டால் அது அடையும் அதன் இயல்பு நிலையே சகஜ நிலை**” என்கிறார் பகவான் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

அதாவது, நீருக்குள் பிறந்து, நீரிலேயே வாழ்ந்து முடியக் கூடியது மீன். அதன் ஆனந்தம் நீருக்குள்தான் இருக்கிறது. நீருக்குள் இங்குமங்கும் நீந்தி விளையாடி, உணவைத்தேடி உண்டு உயிர் வாழக்கூடியது மீன். மீனுக்கு

நீர்தான் உலகம். நீரை விட்டு மீனைப் பிரிப்பது என்பது அதைக் கொல்வதாகும்.

இவ்வாறு, ஒவ்வொரு ஜீவனும் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள கொடுக்கப்பட்ட உடலினைக்கொண்டு முயற்சிக்கும் இயல்புதான் **சகஜம்** எனப்படும். இதில், ஓரறிவு ஜீவர்கள் முதல் ஆறறிவு படைத்த மனிதர்கள் வரை அதனதன் இயல்பு நிலையில் இருக்கத்தான் விரும்பும்.

சகஜ நிஷ்டை என்பதுகால, தேசத்தை கடந்து, பந்தம், முக்தி, தேகம், இந்திரியம், கரணங்கள் என ஒன்றையும் பற்றாமல், தனக்கு என ஒரு தோற்றமும் இல்லாமல், மாயையில் மயங்காமல், இரண்டற்று எல்லாம் ஒன்றாக, எல்லையில்லாமல் விரிந்த, அகண்டாகாரமாக, ஆரம்பமும், முடிவும் இல்லாமல் தன் இயல்பில், தன் சொரூபத்தில் எப்பொழுதும் பிரகாசித்து கொண்டு ஒரே நிலையில் நிற்பது.

அதிலே, மனிதன் மட்டும்தான் தனக்குக் கொடுக்கப்பட்ட பிரத்யேக பகுத்தறிவு கொண்டு, வேதாந்த சாஸ்திரங்களை கற்றறிந்து, தன் சொரூபத்தை உணர்கின்றான். அதன் விளைவாக தன் சொரூபமாகிய ஆன்மாவின் இயல்பில் எப்பொழுதும் நிலைத்து நிற்கின்றான். அவனே **யோகாரூடன்** என்றும் அழைக்கப்படுகிறான்.

**ஓம் தத் ஸத்!**

# தரிசன மார்க்கம்



நம்முடைய சனாதன தர்ம மரபில் **சாங்கியம், யோகம், வைசேடிகம், நியாயம், பூர்வ மீமாம்சம், உத்தர மீமாம்சம்** என ஆறு தரிசனங்கள் அன்றைய கால கட்டங்களில் தோன்றின.

அவைகளில், **பூர்வ மீமாம்சம், உத்தர மீமாம்சம்** என்ற இந்த இரண்டைத்தவிர, மற்ற நான்குமே உலகாயத சிந்தனைகளை மட்டுமே உள்ளடக்கியவைகள். அதாவது, இந்த உலகம், உலகங்களில் வாழ்கின்ற சீவர்கள், அத்தகைய சீவர்களில் மனிதன் செய்ய வேண்டிய கர்மங்கள் போன்ற விசயங்களைப் பற்றியே அவைகள் அதிகம் பேசுகின்றன.

இதிலே, **பூர்வ மீமாம்சம், உத்தர மீமாம்சம்** என்ற இந்த இரண்டு மட்டுமே ஆன்மீக சிந்தனைகளை உள்ளடக்கியவைகள்.